ஜனத்தொகையையும் எடுத்து அதில் தகுந்த பிரகாரம் அவர்களுக்கு ஸ்தானங்கள் ஒதுக்கப்படுவதில்லை. ரிஸர்வேஷன் என்ற முறையில் தர்மம் கொடுப்பது போல்தான் கொடுக்கப்படுகிறது. ஆகவே ஜன விகிதாசார அடிப்படையில் அவர்களுக்கு ஸ்தானங்கள் ஒதுக்குவதற்கு சட்டம் திருத்தியமைக்கப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRIMATHI **LOURDHAMMAL SIMON** : ஹரிஜனங்களின் ஜனத்தொகை எங்கு அதிகமாக இருக்கிறதோ அந்தயிடங்களில் அதற்குத் தகுந்த கவனம் செலுத்தி அதற்கேற்ப இடங்கள் ஒதுக்கப்பட்டுத்தான் வருகின்றன. ஆனால் ஏதோ ஒரு இடத்தில் குறைந்த ஜனத்தொகை இருந்தால் அதற்காகச் சட்டத்தைத் திருத்த வேண்டிய அவசியமில்லை என்றுதான் நான் நினைக்கிறேன்.

*Anicut-cum-brdige across Vellar*

* 203-S *Q*.—SRI R. SRINIVASA IYER : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the present stage of the proposal to construct an anicut-*cum*-bridge across Vellar river in Arantangi taluk, Tanjore district, and

(*b*) when the work is likely to be taken up?

THE HON. SRI P. KAKKAN : (*a*) The Superintending Engineer has sent a proposal to construct a bridge-cum-regulator at M 6/2. The Chief Engineer for Irrigation has referred this to the Chief Engineer (Highways) for his remarks. The matter is now under correspondence between the Public Works Department and the Highways Department.

(*b*) It will not be possible to say now when the work is likely to be taken up.

SRI R. SRINIVASA IYER : அரந்தாங்கி தாலுகாவில் பாசன ஆதார ஏரிகளில் ஏராளமாக தண்ணீர் இல்லாமல் இருக்கின்றதால் வெள்ளாற்றில் இதுமாதிரி அணைகள், "பிறிட்ஜ்-கம்-டாம்ஸ்" இல்லா விட்டாலும், அங்கு அணைகள் கட்டுவதற்காவது உத்தேசம் உண்டா ?

THE HON. SRI P. KAKKAN : அரந்தாங்கி தாலுகா மிகவும் பின்தங்கிய தாலுகா என்று கருதித்தான் இப்பேர்ப்பட்ட திட்டங்களை அங்கு எடுக்க வேண்டுமென்று அரசாங்கம் அவைகளை கொண்டு வந்திருக்கிறது. கருங்காடு என்றவிடத்தில் ஒரு அணை கட்டலாம் என்று இருக்கிறது. ஆகவே, இந்த இரு திட்டங்களும் பரிசீலனை செய்யப்பட்டு எடுத்துக் கொள்ளப்படலாம் என்று நினைக்கிறேன்.

*Avadi Vehicles Depot Civilian Employees' Union*

*203-T *Q*.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) **Avadi Vehicles Depot Civilian Employees, Union**, சார்பில் 26–7–1958 தேதி தொழில் மந்திரி அவர்களுக்கு கொடுத்த மெமொராண்டம் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

(ஆ) இல்லை என்றால் ஏன் ?

13th September 1958]

THE HON. SRI R. VENKATARAMAN : (a) The memorandum has been forwarded to the Defence Minister, Government of India, for suitable action.

(b) Does not arise.

SRI V. K. KOTHANDARAMAN : ஆவடி வெஹிக்குள் டிப்போவை க்ளோஸ் செய்துவிடவேண்டுமென்று, தொழிலாளர்களுக்காக வேண்டி இருக்கக்கூடிய வொர்க்ஸ் கமிட்டியில்கூட அங்கு இருக்கக்கூடிய அதிகாரிகள் அதை க்ளோஸ் செய்வது நல்லதென்று தீர்மானம் போடுவதற்காக வொர்க்ஸ் கமிட்டியில் இதை வற்புறுத்தியதாகவும், அதில் ஒன்றிரண்டு பேர்கள் ஒப்புக்கொள்ளவில்லை என்று சொன்னதும் சர்க்காருக்குத் தெரியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : தெரியாது.

*State Transport, Madras*

* 203-U Q.—SRI S. B. ADITYAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) how many conductors and drivers were recruited in the Madras Government Transport during the last two years; and

(b) how many of them are Tamilians and how many are Malayalees?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) The number of conductors and drivers recruited in the Madras State Transport Department during 1956 and 1957 is as follows :—

| *Year.* | *Conductors.* | *Drivers.* |
|---|---|---|
| **1956** | 109 | 97 |
| **1957** | 27 | 42 |

(b) The number of Tamilians and Malayalees recruited as conductors and drivers during the two years is as follows :—

| | Tamilians. | Malayalees. |
|---|---|---|
| (1) | (2) | (3) |
| **Conductors** .. .. .. | 68 | 39 |
| **Drivers** .. .. .. | 90 | 25 |

SRI S. B. ADITYAN : இந்தக் கண்டக்டர், டிரைவர் வேலைகளுக்கு ஆட்களை எடுக்கும்போது இலங்கையில் இருந்து வந்திருக்கிற திறமைமிக்க அகதிகளைப் பொறுக்கி எடுப்பதன் மூலம் அவர்களுக்கு உதவி அளிக்கக் கூடாதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அந்த வேலைக்குச் சில பரீட்சைகள் பாஸ் செய்திருக்க வேண்டும். டிரைவராக வர வேண்டுமென்றால் டிரைவிங் லைசென்சு, 'பர்ஸ்டு எய்டு டெஸ்டு' முதலியவைகள் பாஸ் செய்திருக்கவேண்டும்.

SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM : கண்டக்டராக நியமனம் பெறுவதற்கு என்ன என்ன தகுதி பெறவேண்டும் ?

THE HON. SRI R. VENKATARAMAN : அவர்கள் லைசென்சு வாங்கியிருக்கவேண்டும். மூன்றும் பாரம் வரையில் படித்து பாஸ் செய்திருக்கவேண்டும்.